**11 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2018 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2018 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2018**

බුද්ධ ධර්මය I, II
பௌத்தம் I, II
Buddhism I, II

**03.12.2018 / 0830 - 1140**

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

## பௌத்தம் I

**கவனிக்க :**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

**1.** சித்தார்த்த இளவரசனுக்கு சிற்ப சாஸ்திரத்தைக் கற்பித்த பிராமண பண்டிதர்,
(1) கொண்டக்ஞ (2) காலதேவல (3) ஸர்வமித்ர (4) ஸுதத்த

**2.** அங்குலிமால, ஆலவக்க ஆகிய கதைகள் வெளிப்படுத்துவது, புத்தரிடத்திலிருந்த
(1) அஸரண ஸரண குணவியல்பையாகும். (2) புரிஸதம்ம ஸாரதீ குணவியல்பையாகும்.
(3) யதாவாதீ ததாகாரீ குணவியல்பையாகும். (4) தாதீ குணவியல்பையாகும்.

**3.** சித்தார்த்த போதிசத்துவர் 'கிங் குஸலகவேஸீ' இல் இருந்த காலத்தில் முதன் முதல் உண்மையைத் தேடிச் சென்றது,
(1) ஆலாரகாலாமவிடம் (2) காலதேவலவிடம்
(3) பக்கவவிடம் (4) உத்தகராமபுத்தவிடம்

**4.** புத்தர் வேரக்ஞவில் 'யவ' எனப்படும் கடிய உணவை உண்டு காலத்தை கழிக்க வேண்டியேற்பட்டது,
(1) பத்தாவது மழைக்காலத்தில் (2) பன்னிரண்டாவது மழைக்காலத்தில்
(3) பதினைந்தாவது மழைக்காலத்தில் (4) இருபத்தோராவது மழைக்காலத்தில்

**5.** புத்தரின் வாழ்க்கையில் அவர் நோயாளர்களைக் கவனிப்பதை எடுத்துக் காட்டும் செயற்பாட்டுக்கு உதாரணமாக அமைவது,
(1) மட்ட குண்டலீ கதை (2) ரஜ்ஜுமாலா கதை
(3) ஸோபாக்க கதை (4) பூதிகத்த திஸ்ஸ கதை

**6.** சித்தார்த்த இளவரசன் திருமணம் செய்த பத்தகச்சானா இளவரசியினது தந்தை,
(1) உதேன மன்னராவார். (2) கோலிய மன்னராவார்.
(3) ஸுப்ரபுத்த மன்னராவார். (4) பிம்பிஸார மன்னராவார்.

**7.** "தானங் ஸீலங் ச நெக்கம்மங்" எனும் காதா (செய்யுள்) விபரிப்பது,
(1) தஸ பாரமிதா பற்றியாகும். (2) தஸ ராஜதர்ம பற்றியாகும்.
(3) தஸ ஸக்விதிவத் பற்றியாகும். (4) தஸ பின் கிரியவத் பற்றியாகும்.

[பக். 2 ஐப் பார்க்க

**8.** ஸம்மா ஸம்புத்த, பச்சேக புத்த, அரஹன்த புத்த ஆகிய மூன்று முறைகளில் உண்மையை உணர முடியும் என தம்ம சுட்டிக் காட்டுகின்றது. இந்த மூன்று முறைகளும் அழைக்கப்படுவது,
(1) துன்தரா போதி (2) த்ரிவித சைத்ய
(3) த்ரிவித ரத்ன (4) த்ரிஷிக்ஷா

**9.** 'தான பரமத்த பாரமிதா' என்பதால் குறிப்பிடப்படுவது,
(1) தனக்குச் சொந்தமான பௌதிகப் பொருள்களை தானமாக கொடுத்தல்
(2) உடல் உறுப்புக்களை தானமாக கொடுத்தல்
(3) மனைவி பிள்ளைகளை தானமாக கொடுத்தல்
(4) தனது வாழ்க்கையை தானமாக கொடுத்தல்

**10.** ஒன்றை ஆரம்பிக்கும்போதும் ஒன்றில் பங்கு கொள்ளும்போதும், ஒன்றில் ஈடுபட்டிருக்கும்போதும் ஈடுபாட்டுடனும் உற்சாகத்துடனும் செயற்படுவதன் முக்கியத்துவத்தினை விபரிப்பது,
(1) ஸத்ய பாரமிதா (2) நெக்கம்ம பாரமிதா
(3) அதிஷ்டான பாரமிதா (4) வீர்ய பாரமிதா

**11.** நிப்பானவை பெற்றுக்கொள்வதற்குத் தேவையான முறையான நடைமுறைகளைப் கடைப்பிடிப்பதால் மகா சங்கரத்தினர்களை அழைக்கும் பெயர்
(1) ஸுபட்டிபன்ன (2) உஜுபட்டிபன்ன
(3) ஆஹுநெய்ய (4) பாஹுநெய்ய

**12.** நான்கு வகை 'சங்கிரஹ வஸ்து' க்கு **உரியதல்லாத** விடயமாவது
(1) தான (2) சீல (3) ப்ரியவசன (4) சமானாத்மதா

**13.** பஞ்சஸ்கந்த அல்லது நாம, ரூபத்தைக் காரணமாகக் கொண்டு ஷடாயதன (ஆறு பகுதி) ஏற்படும் என்பது காரண காரிய தர்மத்தில் குறிப்பிடப்படுகின்றது. அந்த ஆறு பகுதிகளாவன,
(1) ரூப, வேதனா, சஞ்ஞா, சங்கார, விஞ்ஞாண, உபதி
(2) ரூப, சப்த, கந்த, ரஸ, ஸ்பர்ஷ, தர்ம
(3) படவி, ஆபோ, தேஜோ, வாயோ, ஆகாஸ, இந்த்ரிய
(4) சக்கு, ஸோத, கான, ஜிவ்ஹா, காய, மன

**14.** பத்தாலி சூத்திரத்தில் காட்டப்பட்டுள்ளதன்படி, உணவின் அளவை அறிந்து உண்பதனால் உண்டாகும் சிறந்த **பயன் அல்லாதது**
(1) நோயின் பாதிப்புக் குறைதல் (2) இதமான இலகு வாழ்க்கை
(3) உடல் பலம் பெறுதல் (4) மனோபலம் கிடைத்தல்

**15.** "நன்மை, தீமை செயல்களின் சேர்க்கையால் ப்ரதிசந்தி சித்த கீழ்நிலையடையும்" என்பதனைச் சுட்டும் படிச்ச ஸமுப்பாத போதனையாவது,
(1) 'அவிஜ்ஜா பச்சயா ஸங்கார' என்பதாகும். (2) 'ஸங்கார பச்சயா விஞ்ஞாணங்' என்பதாகும்.
(3) 'விஞ்ஞாண பச்சயா நாமரூபங்' என்பதாகும். (4) 'உபாதான பச்சயா பவோ' என்பதாகும்.

**16.** "தனக்கு நன்மையல்லாத தீயவற்றைச் செய்தல் மிகவும் இலகுவானதாகும், நல்லவற்றைச் செய்தல் கடினமாகும்" எனும் கருத்தைக் கொண்டுள்ள தம்மபத காதாவின் (செய்யுளின்) முதல் இரண்டு அடிகளைக் காட்டும் விடையைத் தெரிவுசெய்க.
(1) "யோசே வஸ்ஸதங்ஜீவே - துஸ்ஸீலோ அஸமாஹிதோ"
(2) "நதங் கம்மங் கதங் ஸாது - யங் கத்வா அனுதப்பதி"
(3) "ஸுகரானி அஸாதுனி - அத்தனோ அஹிதானிச்ச"
(4) "அத்தனாவ கதங் பாபங் - அத்தனா ஸங்கிலிஸ்ஸதி"

**17.** உபதிஸ்ஸ பரிபாஜகவினால் வினவப்பட்ட வினாவுக்கு விடையாக "யே தம்மா ஹேதுப்பஹவா - தேஸங் ஹேதுங் ததாகதோ ஆஹ" எனும் காதாவை (செய்யுளை)க் கூறியவர்
(1) கொண்டஞ்ஞ தேரர் (2) பத்திய தேரர்
(3) மஹாநாம தேரர் (4) அஸ்ஸஜி தேரர்

**18.** பௌத்த மதம் காட்டுவதற்கமைவாக ஒன்றை உண்டாக்குவதற்கு இன்னும் வேறு பொருளோ அல்லது பொருள்களோ செல்வாக்குச் செலுத்தும், இந்தக் கருத்தை வெளிப்படுத்தும் பௌத்த எண்ணக்கருவானது,

(1) படிச்சஸமுப்பாத (2) அஹேது அப்பச்சயவாத
(3) அகிறியவாத (4) புப்பெகத ஹேதுவாத

**19.** மரமானது அதன் வேர் வலிமையாக விழுந்து விடாமல் இருக்கும் வரை அந்த மரம் மீண்டும் மீண்டும் துளிர் விடுவதைப் போல மனிதனும் மீண்டும் மீண்டும் சம்சார துக்கத்திற்கு ஆளாவதற்கு காரணமாவது,

(1) பகைமை (2) பேராசை
(3) அகங்காரம் (4) சோர்வுநிலை

**20.** த்ரிஷிக்ஷாவின் ஸமாதி சிக்ஷாவுக்**குரியதல்லாத** மார்க்கப் பிரிவாக அமைவது

(1) ஸம்மா ஆஜீவ (2) ஸம்மா வாயாம
(3) ஸம்மா ஸதி (4) ஸம்மா ஸமாதி

**21.** உலகில் மாறுபாடு அடையாத எந்தவொரு பொருளும் இல்லையென உணர்ந்து கொள்வதற்கு உதவும் பௌத்த பாவனா (தியானம்) முறையாவது,

(1) ஆனாபானஸதி பாவனா (2) மைத்ரீ பாவனா
(3) ஸமத பாவனா (4) விதர்ஷனா பாவனா

**22.** தனக்கு இயலுமாக இருக்குமிடத்தும் வயோதிபமடைந்த தாய் தந்தையரைக் கவனிக்காமையின் தீய விளைவை சுட்டும் சூத்திர போதனையாவது,

(1) மங்கல சூத்திரம் (2) பராபவ சூத்திரம்.
(3) ஸிகாலோவாத சூத்திரம் (4) பத்தகம்மா சூத்திரம்

**23.** ஸிகாலோவாத சூத்திரத்தில் காட்டப்பட்டுள்ளமைக்கு அமைவாக பெற்றோர் தமது பிள்ளைகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகளுக்கு **உரியதல்லாதது,**

(1) அவர்களை தவறான செயல்களிலிருந்து விடுவித்தல்
(2) அவர்களை நல்ல செயற்பாடுகளில் ஈடுபடுத்தல்
(3) உரிய காலத்தில் செல்வத்தைக் கையளித்தல்
(4) வீட்டுப் பொறுப்புக்களை ஒப்படைத்தல்

**24.** "யார் உண்மை பேசுகிறார் யார் பொய் பேசுகிறார் எனும் சந்தேகம் உண்டாக்குதல் ஏற்றதொன்றாகும். பொருத்தமான இடத்திலேயே உங்களுக்குள் சந்தேகம் தோன்றியுள்ளது." எனும் கூற்றினால் கருதப்படுவது,

(1) சிந்தித்தல், கேள்வியெழுப்புதலுக்கான சுதந்திரம்
(2) சமணர், பிராமணர்களின் இயல்பு
(3) உண்மை, பொய் தொடர்பிலான கூற்றுகள்
(4) சமய சகிப்புத்தன்மை

**25.** உற்சாகத்துடனும் கை, கால்களின் வலிமையுடனும், வியர்வையுடனும் அறம்சார் தொழிலில் ஈடுபடுதலை வ்யக்கபஜ்ஜ சூத்திரத்தில் சுட்டுவது

(1) உட்டான ஸம்பதா (2) ஆரக்க ஸம்பதா (3) கல்யாண மித்ததா (4) ஸமஜீவிகதா

**26.** மரணத்தின் பின்னர் வரும் முதலாவது பிறப்பிலோ அல்லது அதற்கடுத்த பிறப்பிலோ பயனை ஏற்படுத்தும் கர்மங்கள்

(1) திட்ட தம்மவேதனீய கர்ம ஆகும். (2) உபபஜ்ஜவேதனீய கர்ம ஆகும்.
(3) அபராபரியவேதனீய கர்ம ஆகும். (4) அஹோஸி கர்ம ஆகும்.

**27.** ஜனக கர்மத்தை தடுப்பதும் அதன் பலத்தைக் குறைப்பதுமான கர்மத்தை குறிப்பது

(1) கடத்தா கர்ம (2) உபத்தம்பக கர்ம
(3) உபபீடக கர்ம (4) உபகாதக கர்ம

**28.** மூன்று வாயில்களினால் ஏற்படும் அகுஸல (தீய) செயல்களுள் காய கர்ம (உடல் ரீதியான கர்ம)த்திற்கு **உரியதல்லாத** விடயமாவது

(1) உயிர்க்கொலை (2) திருட்டு
(3) கற்புநெறி பிறழ்தல் (4) பேராசை (அபிஜ்ஜா)

[பக். 4 ஐப் பார்க்க

29. முதலாவது பௌத்த மகாநாட்டின் தலைமைச் செயற்பாட்டாளர்,
(1) ஸப்பகாமீ தேரர் (2) மொக்லீ புத்த திஸ்ஸ தேரர்
(3) மஹா காஷ்யப தேரர் (4) பார்ஷ்வ தேரர்

30. "புதுன் சரண யெமியி புத் ஸரண யாயுது" என்ற எல்லா பந்திகளின் முடிவிலும் குறிப்பிட்டு புத்த குணங்களை வர்ணிக்கும் அம்ருதாவஹ எனும் பெயருடைய நூலை இயற்றியவர்,
(1) குருலுகோமி பண்டிதர் (2) வித்யா சக்ரவர்த்தி பண்டிதர்
(3) புத்தபுத்ர தேரர் (4) தர்மசேன தேரர்

31. புத்தர் சிலை நிர்மாணம், வணக்கம் என்பன பிரசித்தமானதுடன் சிலைகளின் பாதுகாப்பிற்காக கட்டடம் அமைக்கப்பட்டதையடுத்து அது அறியப்படுவது
(1) சைத்தியகர (2) பதானகர (3) படிமாகர (4) போதிகர

32. ஆட்சியாளன் நீதி நியாயமான வகையில் செயலாற்றாது தனது விருப்பப்படியே பட்சபாதமாகச் செயற்படுதலை குறிக்கும் சொல்
(1) சந்த (2) துவேஷ (3) பய (4) மோக

33. தன்னுடன் ஒப்பிட்டு மற்றவர்களை எண்ணுவதற்குக் கற்பிக்கும் தம்ம பரியாய என்பதனை புத்த மதத்தில் குறிப்பிடப்படுவது
(1) லோகாதிபதி தம்ம ஆகும். (2) அத்தாதிபதி தம்ம ஆகும்.
(3) தம்மாதிபதி தம்ம ஆகும். (4) அத்துபனாயிக தம்ம ஆகும்.

34. கர்ப்பப் பகுதி பானையொன்றைப் போன்று அமைக்கப்படும் ஸ்தூப வடிவத்தினை குறிக்கும் சொல்
(1) தான்யாகார ஸ்தூபம் (2) கண்டகார ஸ்தூபம்
(3) கடாகார ஸ்தூபம் (4) பத்மாகார ஸ்தூபம்

35. மூன்றாவது பௌத்த மகாசபையின் பலாபலன்கள் என்ற வகைக்குள் **அடங்காதது,**
(1) தீய நடத்தையுள்ள பிக்குகளை சாசனத்திலிருந்து வெளியேற்றல்
(2) ஒன்பது நாடுகளில் சாசனத்தை ஸ்தாபித்தமை
(3) அபிதர்ம பிடகத்தினுள் கதாவத்த பிரகரணத்தை ஒன்று சேர்த்தமை
(4) தம்ம வினயத்தைப் பாதுகாத்து வைத்தலைப் பாணக மரபினருக்குப் பொறுப்பளித்தமை

36. ஏற்கனவே சீர்குலைந்து இருந்த புத்த சமயத்தையும் பௌத்தக் கல்வியையும் மீள்நிலைப்படுத்தும் நோக்கத்துடன் தேசப்பற்றாளர்களின் உதவியுடன் பரம விஞ்ஞானார்த்த பௌத்த சங்கத்தைத் தாபித்தவர்,
(1) ஹிக்கடுவே ஸுமங்கல தேரர் ஆவார். (2) மிகெட்டுவத்தே குணானந்த தேரர் ஆவார்.
(3) ஹென்றி ஸ்டீல் ஒல்கட் ஆவார். (4) அனகாரிக தர்மபால ஆவார்.

37. வலிபிட சிறி சரணங்கர சங்கராஜ மஹா தேரரால் இயற்றப்பட்ட நூல்களுள் **அடங்காத** நூலாவது,
(1) முனிகுணாலங்கார (2) புதுகுணாலங்கார
(3) ஸாரார்த்த ஸங்கிரா (4) சதர பணவரசன்ன

38. துட்டகைமுனு மன்னரால் கட்டுவிக்கப்பட்ட சமயக் கட்டிடங்களை மட்டும் காட்டும் விடையினைத் தெரிவுசெய்க
(1) லோவாமஹாபாய, ருவன்வெலிஸாய, அபயகிரி
(2) ருவன்வெலிஸாய, மிரிஸவட்டிய, ஜேத்தவன
(3) மிரிஸவட்டிய, ருவன்வெலிஸாய, லோவாமஹாபாய
(4) ருவன்வெலிஸாய, தூபராம, மிரிஸவட்டிய

39. கண்டி இராச்சிய காலத்திற்குரியதான ஓவியங்கள் காணப்படும் இடம்,
(1) ஹிந்தகலே விஹாரை (2) கல் விஹாரை
(3) திவங்க பிலிமகே (4) மதவல விஹாரை

40. புத்தரின் வலதுகாறை (தோள் பட்டை) எலும்பினை வைத்து தேவநம்பியதீஸ மன்னரால் கட்டப்பட்ட ஸ்தூபம்,
(1) மஹியங்கன சைத்திய (2) தூபராம தாதுகோபம்
(3) கிரிகண்டு ஸேய (4) ரன்கொட் விஹாரை

* *

[பக். 5 ஐப் பார்க்க

**11 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2018 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2018 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2018

බුද්ධ ධර්මය I, II
பௌத்தம் I, II
Buddhism I, II

## பௌத்தம் II

* **முதலாம்** வினாவும் வேறு **நான்கு** வினாக்களும் உட்பட **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.
* முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

---

1. (i) போதிசத்துவ சித்தார்த்தரின் ஞானோதயத்தின் பின்னரான முதலாவது உதான வாக்கியத்திற்குரிய காதாவின் முதல் இரு அடிகளை எழுதுக.
   (ii) சித்தார்த்த இளவரசர் வாழ்வதற்காக சுத்தோதன மன்னன் கட்டிக்கொடுத்த **மூன்று** மாளிகைகளின் பெயர்களைத் தருக.
   (iii) நான்கு வகை முன்னிமித்த (செதர பெர நிமிதி)ங்களை எழுதுக.
   (iv) "லாபோ அலாபோ அயஸோ யஸோ ச" எனும் காதாவினால் உணர்த்தப்படும் தம்ம விடயங்களைச் சுட்டும் பொதுவான பெயரை எழுதுக.
   (v) போதிசத்துவ சித்தார்த்தர் வண்ணுபத ஜாதகத்தில் எந்த பாரமிதாவைப் பூர்த்தி செய்ததாக வெளிப்படுத்தப்படுகின்றது?
   (vi) "ஏஹிபஸ்ஸிகோ" என்பதன் தம்மகுண அர்த்தத்தை எழுதுக.
   (vii) பராபவ சூத்திரத்தின்படி நபர் ஒருவரின் வீழ்ச்சிக்குக் காரணமாகும் **இரண்டு** விடயங்களை எழுதுக.
   (viii) பௌத்த மதம் கற்பிக்கும் 'அத்தீஸுக' என்பதைச் சுருக்கமாக விபரிக்குக.
   (ix) ஸேகியா தம்மத்தின்படி உணவை உண்ணும்போது பின்பற்றவேண்டிய நற்பழக்கங்கள் **இரண்டினை** எழுதுக.
   (x) "அத்த தூலின் வஸீ கிய அத்ரஜய. மத்த ஸவணக் கண புதுரஸின் ஸாதீ கிய புதுரஜாணோ ய..." எனும் செய்யுளைக் கொண்டுள்ள தம்ம நூலினதும் அதனை இயற்றியவரினதும் பெயர்களைத் தருக.

2. (i) புத்தர் இயற்கைச் சூழலுடன் கூடிய மழைக்காலம் வாசம் செய்த **இரண்டு** இடங்களின் பெயர்களைத் தருக.
   (ii) அவர் சூழலின் அழகுக்கு எவ்வாறு மதிப்பளித்தார் என்பதைச் சுருக்கமாக எடுத்துக் காட்டுக.
   (iii) சூழல் வளங்களைப் பாதுகாப்பதனால் பெறக்கூடிய நன்மைகள் யாவை என்பதை விபரிக்குக.

3. (i) "தங்ச கம்மங் கதங் ஸாது" எனும் தம்மபத காதாவைப் பூரணப்படுத்தி எழுதுக.
   (ii) அந்தக் காதாவின் கருத்தினை எழுதுக.
   (iii) தனிப்பட்ட வாழ்க்கையின் திருப்திக்கு புத்திமதி வழங்கும் நூல் என்ற வகையில் தம்மபதத்தை மதிப்பீடு செய்க.

4. (i) தஸ ராஜதர்மத்திற்குரிய விடயங்களுள் **இரண்டினை** எழுதுக.
   (ii) மேலே (i) இல் காட்டியுள்ள விடயங்கள் இரண்டினுள் ஒன்றை விளக்குக.
   (iii) "பொதுமக்களுக்கு நல்ல சேவையை வழங்குவதற்கு தஸ ராஜதர்ம உதவுகின்றது." விபரிக்குக.

[பக். 6 ஐப் பார்க்க

5. (i) மகிந்தரின் வருகை நிகழ்ந்த வகையினைச் சுருக்கமாக எடுத்துக் காட்டுக.
   (ii) இலங்கைத் தீவில் புத்தசமயம் பரவுவதற்குத் தேவநம்பியதிஸ்ஸ மன்னர் ஆற்றிய சேவையினை மதிப்பிடுக.
   (iii) மகிந்தரின் வருகையினால் எமக்குக் கிடைத்த நன்மைகள் பற்றிய விவரணமொன்று தருக.

6. (i) இரண்டாவது பௌத்த மகாசபையை நடாத்துவதற்கு தூண்டிய காரணங்களை எடுத்துக் காட்டுக.
   (ii) அந்த பௌத்த மகாசபை நடந்த இடம், அரச ஆதரவு வழங்கிய ஆட்சியாளன், பங்குபற்றிய பிக்குகளின் எண்ணிக்கை என்பவற்றை எழுதுக.
   (iii) இரண்டாவது பௌத்த மகாசபையின் பலாபலன்களை எடுத்துக் காட்டுக.

7. பின்வரும் தலைப்புக்களுள் **இரண்டினுக்குச்** சிறு குறிப்பெழுதுக.
   (i) ரேருக்கானே சந்தவிமல மஹா நாயக்க தேரர்
   (ii) கல்யாண மித்ததா
   (iii) ஸத்தர்ம ரத்னாவலி
   (iv) புத்தர் சிலை

* * *